[29th September 1958

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Yes, Sir. There is difficulty in getting these tractors imported. Tractors are being made in India also.

SRI V. SUBBIAH : இப்போது, டிராக்டர்களைக் கோரும் எல்லா விவசாயிகளுக்கும் டிராக்டர் கொடுக்கக்கூடிய அளவிற்கு அத்தனை டிராக்டர்கள் அரசாங்கத்திடம் இல்லை. மேலும் சர்க்காரிடம் இருக்கும் டிராக்டர்களிலும் பல சில சமயங்களில் ரிப்பேரில் இருக்கிறது. மணிமுத்தாறு அணைக்கட்டுத் திட்டம் முடிந்த பிறகு ஐந்து புதிய டிராக்டர்களும், வேண்டிய ஸ்பேர் பார்ட்ஸும் போதிய வேலையின்றி தம்மிடம் இருக்கும் என்று அந்தத் திட்ட வேலையில் ஈடுபட்டுள்ள எஞ்சினியர் ஜில்லா ப்ளானிங் போர்டு கூட்டத்தில் தெரிவித்தார். எனவே, மணிமுத்தாறு திட்டம் முடிந்த பிறகு அவைகளை விவசாய இலாகாவிற்கு மாற்றி விவசாய இலாகாவின் மூலம் விவசாயிகளுக்குக் கொடுக்க அரசாங்கம் உத்தேசிக்குமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : விவசாயிகளுக்கு டிராக்டர் கொடுக்கும் திட்டத்தை மீண்டும் மாற்றியமைப்பது சம்பந்தமாக பரிசீலனை நடந்து வருகிறது. மணிமுத்தாறு திட்டத்தில் உபயோகிக்கப்படும் டிராக்டர்களைப் பொறுத்தவரையில், அவைகளைக் கொண்டு வேறு மராமத்துத் திட்டங்கள் நிறைவேற்றப்படவிருக்கின்றன. ஆகையால் அவைகளை அப்படியே விவசாய இலாகாவிற்கு மாற்றுவதற்கில்லை.

SRI A. GOVINDASAMY : சர்க்கார் நடத்தும் விதைப் பண்ணைகளில், டிராக்டர்களை உபயோகிப்பதில் ஏதாவது விசேஷச் சலுகை காட்டப்படுகிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இல்லை.

SRI B. K. LINGA GOWDER : Are the Government aware that out of 12 tractors in the Nilgiris district, 11 tractors are ' sick '?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : I have no information about it but I do take it from the hon. Member.

*Pest attack on paddy crops*

* 618 *Q.*—SRI P. G. MANICKAM : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) the number of acres of paddy crops affected by the pest attack in Madras State during 1957–58;

(*b*) the estimated loss; and

(*c*) who are the officers that are taking preventive measures for combating the pest attack?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*), (*b*) & (*c*) Figures showing the exact area of paddy crops affected by pests and diseases are not available. However, the acreage treated for pests under food crops, the estimated savings in foodgrains and the money value of savings were as follows :—

1. Acreage treated—264,118 (acres).
2. Estimated savings in tons—32,605 (tons).
3. Money value of savings—Rs. 1,67,70,012.

The Crops and Plant Protection Officers, the District Agricultural Officers and other Subordinate Field staff working under them in the districts carry out intensive propaganda on the remedial

measures to be adopted by the ryots for the control of pests and diseases of crops, demonstrate to them the methods of control of pests and diseases and do all that is needed to arrest the incidence of the pests and diseases.

SRI P. G. MANICKAM : கிராமங்களில் இருக்கும் குடியான வர்களுக்கு, பயிர்களுக்கு எந்த எந்த நோய்கள் இருக்கும்போது எந்தெந்த மருந்தை எவ்வாறு தெளிப்பது என்பதெல்லாம் தெரியவில்லை. எனவே சம்பந்தப்பட்ட அதிகாரிகள் குடியானவர்களுடன் தொடர்பு வைத்துக் கொண்டு அவர்களுக்கு இந்த விஷயங்களை விளக்கி வந்தால், நன்றாக இருக்கும். அதற்கு ஏற்பாடு செய்வதில் சர்க்கார் கவனம் செலுத்துமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அதில் இப்போது கவனம் செலுத்தப்பட்டுத்தான் வருகிறது.

SRI T. VELUCHAMI : சென்ற ஜூன், ஜூலை, ஆகஸ்டு மாதங்களில் திருநெல்வேலி ஜில்லாவில் செந்தாழை என்ற நோய் சோளப் பயிர்களை பாதித்திருந்தது. சோள மகசூலே கிடையாது என்று சொல்லும் அளவிற்கு அந்த நோய் சோளப் பயிர்களை பாதித்திருந்தது. இதே மாதிரி அடுத்த ஆண்டிலும் சோளப் பயிர்கள் நோயினால் பாதிக்கப் படாமல் பார்த்துக்கொள்வதற்காக, காலா காலத்தில் அப்பயிர்களுக்கு போதிய பூச்சி மருந்துகள் தயார் செய்து பாதுகாப்புக்கு வேண்டிய முன் நடவடிக்கையை சர்க்கார் எடுப்பார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இவ்விஷயங்களில் அரசாங்கம் போதிய கவனம் செலுத்திக்கொண்டுதான் இருக்கிறது.

SRI C. NATARAJA ODAYAR : இப்போது, பயிர்களைப் பீடிக்கும் பூச்சிகளைக் கொல்லும் மருந்துகள் கண்டிபிடிக்கப்பட்டு, அவை வெளிநாடுகளிலிருந்து இறக்குமதியானாலும், அவைகளை எவ்வாறு உப யோகிப்பது என்பது விவசாயிகளுக்குச் சரியாகத் தெரிவிக்கப்படாத காரணத் தால், அவை சரிவரப் பயன்படுத்தப்படாததுடன் மட்டுமன்றி, அஜாக்கிரதை காரணமாக அவைகளால் விவசாயிகள் பாதிக்கப்படுகிறார்கள். உதாரண மாக, பூச்சி மருந்தை பயிர்களுக்குத் தெளித்த ஒரு விவசாயி கையை சரியாக அலம்பாமல் உணவு உட்கொண்டதால் இறந்தார் என்ற செய்தி யைப் பத்திரிகைகளில் பார்த்தேன். எனவே, பூச்சி மருந்துகளை எவ்வாறு உபயோகிப்பது என்பதை, அறிக்கைகள் மூலமாகவும் விளம்பரங்கள் மூல மாகவும் விவசாயிகளுக்குத் தெரிவிக்க ஏற்பாடு செய்ய அரசாங்கத்தார் முன்வருவார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : சம்பந்தப்பட்ட அதிகாரி களும், தேசீய அபிவிருத்தித் திட்டங்களில் ஈடுபட்டுள்ள கிராம சேவகர் களும் இதர உத்தியோகஸ்தர்களும், பூச்சி மருந்துகளை எவ்வாறு உப யோகிப்பது என்பதை, அவ்வப்போது விவசாயிகளுக்குத் தெரிவித்துக் கொண்டுதான் இருக்கிறார்கள்.

SRI M. K. SOMASUNDARAM : பயிர்கள் பூச்சிகளால் பாதிக்கப்பட்டிருக்கின்றன என்று குடியானவர்கள் சொன்ன பிறகு அதிகாரிகள் அவர்களுக்கு பூச்சி மருந்துகளை வினியோகிக்கிறார்களா அல்லது அதிகாரிகளே ஆங்காங்கே சென்று எங்கெங்கே பயிர்கள் பூச்சி களால் பீடிக்கப்பட்டிருக்கின்றன என்று நேரிடையாகப் பார்த்து, அங் கெல்லாம் விவசாயிகளுக்கு தகுந்த பூச்சி மருந்துகளை வினியோகிக்கிறார் களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அதிகாரிகளே நேரில் சென்று பயிர்களைப் பார்த்து பூச்சி மருந்துகளை வினியோகிப்பார்கள் என்று எதிர் பார்ப்பதற்கில்லை. அதிகாரிகள் அவ்வாறு பணியாற்றினாலும், விவசாயி களும் இந்த விஷயத்தில் அக்கறை எடுத்துக்கொள்ள வேண்டும். விவசாயிகள் அக்கறை எடுத்துக்கொண்டால் அதிகாரிகளும் அவர்களுடன் தொடர்புகொண்டு உதவுவார்கள்.